

# பார்னமின் எலும்புகள்

உலகின் மிகவும் பிரபலமான டைனோசரை **பார்னம் பிரவுன்** கண்டுபிடித்ததெவ்வாறு

ஆங்கிலத்தில்: **டிரேசி ஃபெர்ன்**

படங்கள்: போரிஸ் குலிகோவ்

தமிழில் **குமரேசன் முருகானந்தம்**

ஆரம்பத்திலிருந்தே, **பார்னம் பிரவுன்** ஒரு வித்தியாசமான பையனாக இருந்தார். அவர் வித்தியாசமான பெயர் கொண்டிருந்தார், வித்தியாசமாக உடை உடுத்தினார், மேலும் வித்தியாசமானதொரு பொழுதுபோக்கைக் கொண்டிருந்தார்--- புதைபடிவங்களைத் தேடுவது. **பார்னம், கன்சாஸ்** மாகாணத்திலிருந்த தனது குடும்பப் பண்ணையில் நூற்றுக்கணக்கான புதைபடிவங்களைச் சேகரித்தார், ஆனால் அவர் இன்னும் வித்தியாசமான ஒன்றைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று கனவு கண்டார்: டைனோசர்கள்! ஒரு இளைஞனாக, **பார்னம்** அமெரிக்க இயற்கை வரலாற்று அருங்காட்சியகத்தில் பணியாற்றினார், மேலும் அருங்காட்சியகத்திற்கான முதல் **டைனோசர்** எலும்புக்கூடுகளை விரைவிலேயே கண்டுபிடித்தார். 1902 ஆம் ஆண்டில் ஒரு நாள், மொன்டானாவின் வறண்ட நிலப்பகுத்யில் டைனோசர்களை தேடுவதில் ஈடுபட்டிருந்த **பார்னம்**, மலைப்பகுதியில் இருந்து வெண்-பழுப்பு நிற எலும்பு ஒன்று துருத்திக்கொண்டிருப்பதைக் கண்டார். **பா ர் ன ம்** இது போன்ற எதையும் இதற்கு முன் பார்த்ததில்லை. அது என்னவாக இருக்கக்கூடும்? அவர் கண்டுபிடித்தது என்னவென்று அறிவதற்கு, **பர்ன**மிற்கு பல மாதங்கள் தோண்டவும், தோண்டி எடுத்த எலும்புகளை ஒன்றாகப் பொருத்திப்பார்க்கவும் எடுத்துக்கொண்டது: உலகின் முதல் tடைரனோசொரஸ் ரெக்ஸ்! பூமியில் உள்ள அனைவரையும் விட அதிக டைனோசர் எலும்புகளை **பார்னம்** சேகரித்தார், மேலும் **டி. ரெக்ஸ்** உலகின் மிகவும் பிரபலமான டைனோசராகியது - **பார்னம்**மைப் போலவே முக்கியமானது மற்றும் வித்தியாசமானது.





# பார்னமின் எலும்புகள்

உலகின் மிகவும் பிரபலமான

டைனோசரை **பார்னம் பிரவுன்**

கண்டுபிடித்ததெவ்வாறு

ஆங்கிலத்தில்: டிரேசி ஃபெர்ன்
படங்கள்: போரிஸ் குலிகோவ்
தமிழில்: **குமரேசன் முருகானந்தம்**

பிப்ரவரி 12, 1873 அன்று கன்சாஸில் உள்ள கார்போண்டேலில் உற்சாகமளிக்கும் நிகழ்வு ஒன்று நடந்தது. **பிரவுன்** குடும்பத்திற்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது, இந்த நிகழ்வானது சர்க்கஸை விட மிகவும் மகிழ்ச்சியளிப்பதாக இருந்தது, மேலும் **பிரவுன்** தம்பதியினர் சர்க்கஸை நேசித்தனர்! உண்மையில், **பிரவுன்** தம்பதியினர் சர்க்கஸை அவ்வளவு நேசித்தார்கள், அதனால் அமெரிக்காவின் மிகவும் பிரபலமான சர்க்கஸ் உரிமையாளரான **பி.டி. பார்னம்** அவர்களின் நினைவாக தங்கள் குழந்தைக்கு **பார்னம்**அவர்கள் என்று பெயரிட்டனர், முக்கியமான, தனித்துவமான விஷயங்களைச் சாதிக்க முக்கியதத்துவம் வாய்ந்த, வித்தியாசமான பெயர் அவரைத் தூண்டும் என்று **பார்னம்** தம்பதியினர் நம்பினர்.

**பார்னம்** ஆரம்பத்திலிருந்தே வினோதமான செயல் ஒன்றைச் செய்யலானார்.

**பார்னம்** தத்தித்தத்தி நடக்க ஆரம்பித்ததும், அவன் தனது அப்பாவின் கலப்பைக்குப் பின்னால் பின்தொடர்ந்தான், அது தோண்டி வெளிக்கொண்டுவரும் பண்டைய பவளப்பாறைகள், சிப்பிகள், நத்தைகள் மற்றும் சோழிகளை மண்ணிலிருந்து சேகரித்தான்.

**பார்னம்** தான் சேகரித்தவற்றை பெட்டிகளில் இட்டு நிரப்பினான். அலங்கார மேசையின் இழுவறைகள் அனைத்திலும்அவற்றைக் கொண்டு நிரப்பினான். அவனுடைய படுக்கையறை முழுவதும் அவற்றால் நிரப்பினான். அவன் முன் வரவேற்பறையை நிரப்பியபோது, அவனுடைய அம்மா –தனது மகனுக்காக தான் கனவு கண்ட அற்புதமான முக்கிய விஷயங்களில் முன் வரவேற்பறையை நிரப்பியுள்ள சிப்பிகளும், புதைபடிவங்களும் இருக்கும் என்று ஒருபோதும் கருதவில்லை – அவர், அவனது பொக்கிஷங்களை ச[illegible]வயக கட்டிடத்திற்கு மாற்ற வைத்தார்.

**பார்னம்** தனது சேகரிப்பைப் ஆராயவதில் பல ஆண்டுகள் செலவிட்டார், மில்லியன் கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு, ஆழமற்ற, சுழல் நிறைந்த கடற் பகுதியில், அவரது குடும்பத்திற்கு சொந்தமான உரமிட்டு மேம்படுத்தப்பட்ட மண்ணைக் கொண்ட, நீர் பாசனமில்லாத பண்ணை இருந்தபோது உலகம் எப்படி இருந்திருக்கும் என்று கற்பனை செய்ய முயன்றார். பிறகு ஒரு நாள், அவர் புரோண்டோசாராஸ் மற்றும் ட்ரைசெராடோப்கள் மற்றும் ஸ்டேகோசாராஸ் மற்றும் பல மேற்கில் கண்டெடுத்த டைனோசர் படிமங்களைப் பற்றி ஆராய்ந்தார்— **பார்னம்** தான் கண்டுபிடித்ததாக இருக்க வேண்டி சில எலும்புகளைக் கண்டுபிடிக்க விரும்பினார், குறிப்பாக யாரும்இதுவரை கண்டுபிடித்திறாத உயிரினங்களின் எலும்புகளை.

**பார்னம்** கன்சாஸ் பல்கலைக்கழகத்தில் புதைபடிவயியல் படித்த போது அவருக்கு அந்த வாய்ப்பு கிடைத்தது. ஒரு சிறந்த மாணவராக விளங்கினார் அவர், அதனால் அவருடைய பேராசிரியர் அவரை 1894 மற்றும் 1895 ஆம் வருடங்களின் கோடைகாலங்களை தெற்கு ***டகோட்டா*** மற்றும் ***வயோமிங்*** பகுதிகளில் புதைபடிவங்களைத் தேடுவதில் செலவிட அழைத்தார். ஒவ்வொரு நாள் காலையிலும், **பார்னம்** சூரிய உதயத்தின்போது புறப்பட்டு விடுவார். அவர் மலைகள் மீது ஏறியும், சிற்றோடை படுகைகளைக் கடந்தும், செங்குத்தான மலைச் சரிவுகளிலும், நீரோடைகள் ஊடேயும், கிலுகிலுப்பை ஒலிஎழுப்பும் விரியன் (***ரேட் டில் ஸ் னேக்***) பாம்புப் புற்றுகளின் ஊடே நடந்தே பயணப்பட்டார். பெரும்பாலான மக்கள் இதை சித்திரவதை என்று நினைக்கக்கூடும். ஆனால், **பார்னம்** அதை ஓர் அபாரமானதாக நினைத்தார்.

வழக்கத்திற்கு மாறாக நேர்த்தியாக உடை அணிபவரான **பார்னம்**, சில சமயங்களில் விலங்கின் உரோமத்தாலான கோட், சூட் மற்றும் டை, பளபளக்கும் கருப்பு பூட்ஸ் மற்றும் பவுலர் ஹாட் எனப்படும் கெட்டியான தொப்பி அணிந்து வருவார். எப்படிப்பட்ட ஆடை அணிந்திருந்தாலும்,
**பார்னம்** எலும்புகளைத் தேடிக் கண்டெடுத்தார். அவர் எந்த புதிய உயிரினம் ஒன்றையும் கண்டுபிடிக்கவில்லை, ஆனால் அவரும் மற்ற வயோமிங் தேடி பயணிப்பவர்களும் 1,400 பவுண்டுகளுக்கு மேல் எலும்புகளை சேகரித்தனர் –
ஆறு அடி நீளம், நான்கரை அடி அகலம், கிட்டத்தட்ட சரியான **ட்ரைசெராடாப்ஸ்** மண்டை ஓடு உட்பட!



கொலம்பியா பல்கலைக்கழகத்தின் பேராசிரியரும் நியூயார்க் நகரத்தில் உள்ள அமெரிக்க இயற்கை வரலாற்று அருங்காட்சியகத்தின் நிர்வாகியுமான **ஹென்றி ஃபேர்ஃபீல்ட் ஆஸ்போர்ன்**, கன்சாஸ் பல்கலைக்கழகத்தில் **பார்னமின்** பேராசிரியரிடமிருந்து எலும்புகளைத் தேடிக் கண்டெடுப்பதில் **பார்னமின்** திறமையைப் பற்றி கேள்விப்பட்டார்.

பேராசிரியர் **ஆஸ்பர்ன்** இந்த அருங்காட்சியகத்தில் உலகின் சிறந்த டைனோசர்களின் சேகரிப்பு இருக்க வேண்டும் என்று விரும்பினார். இதுவரை, அருங்காட்சியகத்தில் எதுவும் இல்லை.

பேராசிரியர் ஆஸ்போர்ன் அருங்காட்சியகத்திற்கான புதைபடிவ தேடல்களில் பணியாற்ற **பார்னம்**மை பணியமர்த்தினார்.

சற்றே அச்சுறுத்துவது போலிருக்கும் பேராசிரியர் **ஆஸ்பர்னை** பெரும்பாலான மக்கள் "சார்" என்று அழைத்தனர். **பர்னம்** அவரை "***மை டியர் ப்ரொஃபசர்***" என்று அழைத்தார்

*மை டியர் ப்ரொஃபசர்* 1897ல் புதைபடிவங்களைத் தேட **பார்னமை** திரும்பவும் ***வயோமிங்***கிற்கு அனுப்பினார். இப்போதும், **பார்னம்** புதிய இனங்கள் எதையும் கண்டுபிடிக்கவில்லை, ஆனால் அவர் அருங்காட்சியகத்தின் முதல் முக்கியமான டைனோசர்களான மிக நீண்ட கழுத்தைக் கொண்ட **சாரோபாட்கள்** இரண்டு, **டிப்ளோடோகஸ் லாங்கஸ்** மற்றும் ஒரு **அபடோசொரஸ்** ஆகியவற்றைக் கண்டுபிடித்தார். பின்னர், டிசம்பர் 1898 இல், *மை டியர் ப்ரொஃபசர்* **தென் அமெரிக்கா**வில் உள்ள **படகோனியா**வுக்கு எலும்புகளை சேகரிக்கும் ஒரு பயணத்திற்கு **பார்னமை** அனுப்பினார். கப்பல் விபத்துக்குள்ளான போதிலும், ஒரு மலை சிங்கம் எலும்புகளை ஏறக்குறைய சாப்பிட்டிருந்த போதிலும், நான்கரை டன் பாலூட்டி புதைபடிவங்களை **பார்னம்** கொண்டுவந்தார். ஒரு வருடத்திற்கும் மேல் கழித்து, தனது படகு நிறைய எலும்புகளுடன் அவர் நியூயார்க் நகரத்திற்குத் திரும்பினார்.

"அவர் புதைபடிவங்களின் மணத்தை அறியக்கூடியவராக இருக்க வேண்டும்," என்றார் *மை டியர் ப்ரொஃபசர்*.



**பார்னம்** ஒரு நல்ல முகரும் சக்திக்கு மேல் திறமை உடையவர் மூக்கு. அவர் உலக வரைபடங்கள் மற்றும் புவியியல் புத்தகங்களை படித்தார். உள்ளூர் மக்களுடன் உரையாடினார். அவர் பாறை அடுக்குகளின் வடிவம் மற்றும் நிறம் மற்றும் அமைப்பு ஆகியவற்றை ஆய்வு செய்தார்.

புதைபடிவங்கள் மீதான அவரது ஆர்வம் அவரை மேலும் மேலும் எலும்புகளை வெளிக்கொணர வழிவகுத்தது, ஆனால் அவர் இன்னும் புதிதாக ஒன்றைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று கனவு கண்டவாறு இருந்தார்.

1902 ஆம் ஆண்டு, ஒரு நாள் காலை, நியூயார்க் விலங்கியல் பூங்காவின் இயக்குனரான **பார்னமின்** நண்பரான வில்லியம் ஹார்னடே, மொன்டானாவில் உள்ள ஹெல் க்ரீக்கிற்கு அருகிலுள்ள பேட்லாண்ட்ஸில் வேட்டையாடும் பயணத்தில் கண்டெடுத்த ஒரு சுவாரஸ்யமான பாறையை பார்னமுக்கு வழங்கினார். பர்னமின் மூக்கு துடிக்க ஆரம்பித்தது. பாறை என்பது வெறும் பாறை அல்ல - அது ஒரு ட்ரைசெராடாப்ஸின் கொம்பு ஆகும்!

ஜூன் 1902 இல், **பர்னமும்** ஒரு சிறிய குழுவினரும் ரயிலிலும், பின்னர் குதிரைகளிலும் மேற்கு அமெரிக்காவின் ஒரு தரிசு பீடபூமி பகுதிக்குச் (முக்கியமாக வடக்கு மற்றும் தெற்கு டகோட்டா மற்றும் நெப்ராஸ்கா) சென்றனர். பார்னம் நிறைய புதைபடிவங்களைக் கண்டுபிடித்தார், ஆனால் அவை அனைத்தும் சேதமடைந்திருந்தன அல்லது ஏற்கனவே நன்கு அறியப்பட்டவை. நியூயார்க்கில், மை டியர் ப்ரொஃபசர் எரிச்சலடைந்தவராக இருந்தார்.

பிட்ஸ்பர்க்கில் உள்ள கார்னீகி மியூசியம் ஆஃப் நேச்சுரல் ஹிஸ்டரியில் அவரது போட்டியாளர்கள் பிரமிப்பூட்டுகிற அபாரமான ஒன்றை கண்டுபிடித்தனர் -அது டிப்ளோடோகஸ் கார்னெகி என்ற புதிய வகை டைனோசரின் பல எலும்புகளாகும். தொழிலதிபரும் அருங்காட்சியகத்தின் நிறுவனருமான ஆண்ட்ரூ கார்னீகியின் நினைவாக அதற்கு அப்பெயரிடப்பட்டது.

ஒரு நாள் செங்குத்தான குன்றின் கீழ் விழுந்திருந்த சில கற்பாறைகளை **பார்னம்** கண்டார். அவர் தனது குதிரையை விட்டு இறங்கி குன்றின் மீது ஏறினார். மலையடிவாரத்தில் பால் கலந்த காபியின் பழுப்பு நிறத்தில் ஒரு எலும்பு துருத்திக்கொண்டிருப்பதைக் கண்டார். **பார்னம்** ஒரு மென்மையான பிரஷ் கொண்டு தளர்வான மணலை அகற்றினார். பின்னர் அவர் எலும்பைச் சுற்றி தோண்டத் தொடங்கினார். அவர் எவ்வளவு ஆழமாக தோண்டினாரோ, அவ்வளவு எலும்புகளை அவர் கண்டுபிடித்தார். இரவு கவிழும் வரை **பார்னம்** தோண்டினார்.

அடுத்த நாள் காலை அவர் தனது குழுவினருடன் மீண்டும் அங்கு சென்றுபணியைத் தொடர்ந்தார், அவர்கள் எஃகு போன்ற கடினமான நீல நிற மணற்கல் அடுக்கை எட்டும் வரை தோண்டினர். **பார்னம்** கவனமாக டைனமைட் மூலம் பாறை அடுக்குகளை வெடிக்கச் செய்தார். பின்னர் குவாரியில் உலோக சுத்தியல் இடிக்கும் சப்தம், எலும்பின் மீது இரும்பு கம்பிகளின் கீறல் சப்தம் மற்றும் பிரஷ்களின் மென்மையான உரசல் சப்தம் ஆகியவற்றால் நிரம்பியது.

இறுதியாக, **பார்னம்** மாபெரும் வளைந்த எலும்பு ஒன்றின் வெளிப்புறத்தைக் காணத் தொடங்கினார் - டைனோசரின் இடுப்பு. பின்னர் அவர்அந்த உயிரினத்தின் சில முதுகெலும்புகள், ஒரு தொடை எலும்பு, ஒரு கை எலும்பு மற்றும் பிற எலும்புகளைக் கண்டுபிடித்தார். இந்த எலும்புகளைப் போன்ற எதையும் **பார்னம்** இதற்கு முன் கண்டதேயில்லை.



துரதிர்ஷ்டவசமாக, அக்டோபர் தொடக்கத்தில், பருவகாலம் முடிந்துவிட்டது. விரைவிலேயே பனி நிலங்களை மூடியது. **பார்னம்** அந்த வலுவற்ற உடையக்கூடிய எலும்புகளை பாதுகாப்பாக அருங்காட்சியகத்திற்கு கொண்டு செல்ல வேண்டியிருந்தது. அவர் வெளியில் துருத்திக்கொண்டு இருக்கும் எலும்புகளின் பகுதிகளில் ஷெல்லாக் தடவி, அப்புதைபடிவங்களை ஒரு மெல்லிய செய்தித்தாளில் மூடி, மேலும் பிளாஸ்டரில் நனைத்த சணல் துணிப் பட்டைகளை பல அடுக்குகளில் சுற்றி கடினமான, பாதுகாப்பு மிக்க வார்ப்புகளை உருவாக்கினார்.

**பார்னம்** நான்கு குதிரைகளை ஒரு வேகனில் பூட்டி, இரண்டு டன் இடுப்பு எலும்பு மற்றும் மற்ற எலும்புகளை 130 மைல் தூரம் ரயிலுக்கு மெதுவாக இழுத்துச் சென்றார். வழியில், **பார்னம்** சில சுவாரஸ்யமான இலைகளையும், பழங்கால முதலை எலும்புக்கூடுகளாக இருக்கலாம் என்று அவர் நினைத்த நான்கையும் சேகரிக்கும் என்னத்தைதை **பார்னமால்** தவிர்க்க முடியவில்லை.

அடுத்த சில பருவங்களுக்கு, பார்னம் மற்ற புதைபடிவப் பயணங்களில் மும்முரமாக இருந்தார், ஆனால் அவரும் அவரது குழுவினரும் ஜூன் 1905 இல் ஹெல் க்ரீக்கிற்குத் திரும்பி மேலும் கூடுதலான எலும்புகளை வெளிக்கொணர்ந்தனர். குளிர்கால மாதங்களில், அவர்கள் அருங்காட்சியகத்தின் ஆய்வகத்தில் ஒரு மாபெரும் ஜிக்சா புதிர் போன்ற எலும்புகளை பொருத்தும் பணியில் ஈடுபட்டிருந்தனர்.

மை டியர் ப்ரொஃபசர் புதிய டைனோசர் இனத்திற்கு டைரனோசொரஸ் ரெக்ஸ் என்று பெயரிட்டார், "ராஜாக்களின் ராஜா ... போரிடும் ஓர் இயந்திரம்."

பார்னம் அதை தனது “செல்லக் குழந்தை" என்று அழைத்தார்.

**பர்னமும்,** **மை டியர் ப்ரொஃபஸரும் *T. ரெக்ஸ்*** எலும்புத் துண்டுகளை ஆய்வு செய்து, எலும்புக்கூட்டின் ஒரு பகுதியை அருங்காட்சியகத்தில் காட்சிப்படுத்தினர். ஆனால் ***டி. ரெக்ஸ்*** புதிரில் முழு தலை உட்பட பல பகுதிகள் காணவில்லை. **பார்னம்** தனது புதிய டைனோசரைப் பற்றி மேலும் தெரிந்து கொள்ள ஏங்கினார். துல்லியமாக, பார்ப்பதற்கு அது எப்படி இருந்தது? அது என்ன சாப்பிட்டது? அது எப்படி நடந்தது?

எனவே 1908 ஆம் ஆண்டில், **பார்னமும்** சில மனிதர்களும் அவர் இதுவரை தேடிப்பார்க்காத **பேட்லாண்ட்ஸ்** பகுதிக்கு சென்றனர். **பார்னம்** பல வாரங்களாகத் தேடிப் பார்த்தார், சூரிய ஒளியால் வலி உண்டாகுமாறு தோல் கன்றிச் சிவந்ததும், கொசுக் கடியையும் தவிர வேறு எதுவும் கிடைக்கவில்லை.



ஜூலை 1 ஆம் தேதி, பார்னமும் அவரது குதிரை பிரவுனியும் பிக் ட்ரை க்ரீக்கில் மற்றொரு நீண்ட, வெப்பமான, பலனற்ற நாளுக்குப் பிறகு கடினமான பாறை மீது டக்-டக் என்று ஒலி எழுப்பியவாறு பயணம் செய்தனர். பார்னம் ஏற்கனவே இந்த பகுதியில் பல முறை சல்லடை போட்டு தேடியுள்ளார். அவர் வேறு எங்காவது தேடத் தொடங்க வேண்டும் என்று அவருக்குத் தெரியும், ஆனால் எப்படியோ அவர் புதைபடிவங்களை மணத்தை உணர்ந்தார். கடைசியாக ஒரு முறை செங்குத்தான மலையின் சமதளத்தை நோட்டம்விட்டார். திடீரென்று, பார்னம் சூரிய ஒளியில் ஒரு அசாதாரண பாறை மின்னுவதைக் கண்டார்.

பார்னமும் பிரவுனியும் ஒரு நெருக்கமாக காண்பதற்காக செங்குத்தான மலையில் ஏறினார்கள். ஆம்! பார்னம் எதிர்பார்த்தது போலவே, அசாதாரணமான பாறை ஒரு எலும்பின் வழுவழுப்பான, ஓரங்கள்வட்டமாக! ஆனால் உண்மையிலேயே அது என்ன?

அடுத்த நாள், பர்னமும் அவரது குழுவினரும் எலும்பைச் சுற்றி ஆறு அடி பள்ளம் தோண்டினர். அவர்கள் எல்லா இடங்களிலும் எலும்புகளைக் கண்டார்கள். ஆனால் எலும்புகள் மிகவும் தாறுமாறாக அடையாளம் காண முடியாத அளவுக்கு படிவுப்பாறையில் மிகவும் ஆழமாக பதிந்திருந்தன.

பார்னம் பல வாரங்களாக சுரண்டியும், ஆழக் கீறியும், தோண்டியும், வெடி வைத்துச் சிதறச் செய்தார், இருப்பினும் அவர் என்ன கண்டுபிடித்தார் என்று இன்னும் தெரியவில்லை. விஷயங்களை மேலும் மோசமாக்கும் வகையில், தோண்டுவதையோ, சமையலையோ - விரைவாகச் செய்ய உதவுவதற்கு கூடுதல் ஆட்களை அவரால் கண்டுபிடிக்க முடியவில்லை. அதிர்ஷ்டவசமாக, பார்னம் அரிய வகையில் ஒரு நல்ல சமையல்கார்ர கூட.

படிப்படியாக, **பார்னம்** தனது கண்டுபிடிப்பை அடையாளம் காண போதுமான எலும்புகளை வெளிகொனர்ந்தார். அது அவர் கனவு கண்ட புதையல் - ஆறு அங்குல நீள ரம்பம் போன்ற பற்கள் பதிந்த, சரியாக, நான்கு அடி நீளமுள்ள டி-ரெக்ஸின் மண்டை ஓடு. உள்ளபடியே, முழு எலும்புக்கூட்டும் கிட்டத்தட்ட முழுமையாக இருந்தது, கால் எலும்புகள் மட்டும் கிடைக்கவில்லை. ஆனால், அவரது முதல் கண்டுபிடிப்புடன் சேர்த்து, இறுதியாக இணைத்து முழு விலங்கையும் உருவாக்க போதுமான எலும்புகள் அவரிடம் இருந்தன.

குறிப்பிடத்தக்க வகையில் நன்றாக நடனமாடக்கூடியவரான பார்னம், அருகில் உள்ள பண்ணையில் நள்ளிரவு வரை டேங்கோ மற்றும் டூ-ஸ்டெப் நடனமாடி தான் கண்டேடுத்ததைக் கொண்டாடினார்.

மிகவும் உற்சாகமடைந்திருக்கும் அன்புள்ள எனது பேராசிரியர், டி. ரெக்ஸைப் பார்க்க மோன்டானாவுக்கு வர முடிவு செய்துள்ளார்.

அனைத்து எலும்புகளையும் தோண்டி எடுத்து குதிரை மற்றும் வாகனம் மூலம் அருகிலுள்ள ரயில் நிலையத்திற்கு இழுத்துச் செல்ல **பார்னம்**க்கு 1908 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் வரை எடுத்துக்கொண்டது. பின்னர் அவற்றை சுத்தம் செய்து சரியாக பொருத்தி எலும்புக்கூட்டை  நிறுத்திட மேலும் ஏழு வருடங்கள் எடுத்துக்கொண்டது.

இறுதியாக, **பார்னம்**மால் அவர் நீண்ட காலமாக கனவு கண்டது நிறைவேறியதைக் காண முடிந்தது: முற்றிலும் புதிய டைனோசர் இனத்தின் முழுமையான எலும்புக்கூடு - மேலும் மிகப்பெரியதும் கூட! அது 47 அடி நீளம், பெரிய பாதங்கள் மற்றும் கூர்மையான நகங்களுடன் கூடிய **பார்னமின்** புதிய மாமிச உண்ணி  டைனோசர்.

டி. ரெக்ஸ் விரைவில் உலகின் மிகவும் பிரபலமான டைனோசர் என்றானது. இதனை காண லட்சக்கணக்கான பார்வையாளர்கள் வந்தனர். அதை ஆய்வு செய்ய நூற்றுக்கணக்கான அறிவியலாளர்கள் வந்தனர்.

**பார்னம்** உலகம் முழுவதும் எலும்புகளைச் சேகரிக்கப் பயணப்பட்டார். அவர் கனடாவில் படகு மூலம் தேடலானார்.





இந்தியாவில் யானை மீதும்

அமெரிக்காவில் விமானம் மூலமும்,



கியூபாவில் முக்குளித்தல் மூலமும் தேடலானார்.

பூமியில் உள்ளவர் எவரையும் விட அதிகமான **டைனோசர்** எலும்புகளை **பார்னம்** சேகரித்தார். ஆனால் ***டி. ரெக்ஸ்*** அவருக்கு மிகவும் பிடித்த செல்லக் குழந்தை போன்றே இருந்தது.



அவரது குடும்பத்தினர் விரும்பியதைப் போலவே, **பார்னம்** முக்கியமான மற்றும் அசாதாரணமான ஒன்றைச் செய்தார்: அவர் தூங்கிக் கொண்டிருந்த டைனோசரைக் கண்டுபிடித்து அதை மீண்டும் உயிர்ப்பித்தார்.

முற்றிலுமாக அழிந்து அறுபத்தாறு மில்லியன் ஆண்டுகளுக்குப் பின், **டி. ரெக்ஸ்**, **பார்னமின்** எலும்புகளில் வாழ்கின்றது!

# ஆசிரியர் குறிப்பு

1897 இல் அமெரிக்க இயற்கை வரலாற்று அருங்காட்சியகத்திற்கு **பார்னம் பிரவுன்** வந்தபோது, அதில் ஒரு டைனோசர் மாதிரி இல்லை. 1963 இல் அவர் இறந்தபோது, அருங்காட்சியகத்தில் உலகின் மிகப்பெரிய டைனோசர் எலும்புகள் இருந்தன. இவற்றில் பெரும்பாலானவற்றை பர்னம் தானே கண்டுபிடித்தார். மீன், பாலூட்டிகள் மற்றும் முதுகெலும்பில்லாத விலங்குகள் மற்றும் வாழும் தாவரங்கள் மற்றும் தொல்பொருள் பொருட்கள் உட்பட அழிந்துபோன பிற விலங்குகளின் புதைபடிவங்களையும் **பார்னம்** சேகரித்தார்.

**பார்னம்** அண்டார்டிகாவைத் தவிர அனைத்து கண்டங்களிலும் எலும்புகளைத் தேடினார். அவர் ஒரு அசாதாரணமான நல்ல கதைசொல்லி மற்றும் ஒவ்வொரு எலும்பு வேட்டையைப் பற்றியும் சொல்ல ஒரு கதை இருந்தது-இந்தியாவில் ஒரு பெரிய சிலந்தியுடன் ஓடுவது, நியூ மெக்சிகோவில் எரிமலை பள்ளத்தில் விழுந்தது மற்றும் மலேரியாவுடன் சண்டையிடுவது எப்படியோ அவரை சேகரிக்க வழிவகுத்தது. முழுமையான புதைபடிவ ஆர்ட்வார்க், சில புதைபடிவ பண்டைய குதிரைகள் மற்றும் முந்நூறு வகையான வாழும் காட்டுப்பூக்கள்!



இயற்கை வரலாற்று அருங்காட்சியகத்தில் **பர்னம்** மற்றும் அவருக்குப் பிடித்த குழந்தை **டி. ரெக்ஸ்.** 1918

எலும்புகளை தேடுவதைத் தவிர, **பார்னமுக்கு** மற்றொரு வேலையும் இருந்தது: உளவு. முதல் உலகப் போர் மற்றும் இரண்டாம் உலகப் போரின் போது, **பார்னம்** அமெரிக்காவிற்கான முக்கியமான புவியியல் மற்றும் புவியியல் தகவல்களைப் பெற புதைபடிவக் கண்டுபிடிப்பாளராக தனது பதவியைப் பயன்படுத்தினார்.

**பார்னம்** ஒரு சிறந்த புதைபடிவ கண்டுபிடிப்பாளராக இருந்தபோதிலும்,, அவர் தனது கள கண்டுபிடிப்புகள் பற்றிய விவரங்களைக் குறிப்புகளில் எழுதவோ, அவரது சக ஆய்வாளர்களைப் போல பெரும் எண்ணிக்கையில் அறிவியல் கட்டுரைகளை வெளியிடவில்லை. இதேபோல், அவருக்கு பெயரிடப்பட்டது பற்றிய குடும்பக் கதைகள் உள்ளிட்ட வெளியிடப்படாத சில சுயசரிதைக் குறிப்புகளை **பார்னம்** எழுதியிருந்தாலும், மேலும் அவரது ஆரம்பகால குடும்ப வாழ்க்கையைப் பற்றிய கதைகளை மற்றவர்களுக்குச் சொல்லியிருந்த போதிலும், அவர் தனது சுயசரிதையை வெளியிடவில்லை. இதன் விளைவாக, அவரது ஆரம்பகால வாழ்க்கையின் சில அம்சங்கள் - உதாரணமாக, அவரது குடும்ப உறுப்பினர்களில் யார் சர்க்கஸ் பிரியர்கள் மேலும் **பார்னம்** எப்போது, ஏன் தனது விசேடசமையங்களில் அணியும் உடையை சில சமயங்களில் களத்தில் அணிந்து கொள்ளும் வித்தியாசமான பழக்கத்தைக் கொண்டிருந்தார் என்பது தெளிவாக தெரியவில்லை. அவ்வப்போது முழுமையடையாத அல்லது முரண்பாடான இத்தகைய விவரங்கள் இருந்தபோதிலும், **பார்னமின்** புதைபடிவ கண்டுபிடிப்புகள் மேலும் விளக்கம் தேவையில்லை என்ற அளவிலும், தெளிவாகவும் இருக்கின்றன. புதைபடிவ இயலில் முக்கிய கேள்விகளுக்கு பதிலளிக்க இன்றும் அவை பயன்படுத்தப்படுகின்றன, மேலும் பறவைகளும் டைனோசர்களும் தொடர்புடையதாக இருந்திருக்கலாம் என்ற அச்சமையத்தில் அதிகம் விவாதிக்கப்பட்ட கோட்பாடு உள்ளிட்ட **பார்னமின்** சில நம்பிக்கைகள் பரவலாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன.

அவரது நுட்பங்கள், கண்டுபிடிப்புகள் மற்றும் யோசனைகள் டைனோசர்கள்-குறிப்பாக **பார்னமின்** செல்லக்குழந்தை, டி. ரெக்ஸ்-உண்மையில் பூமியின் ராஜாக்களாக இருந்த காலத்தைப் புரிந்துகொள்வதற்கு உதவுகின்றன.

**முற்றும்**